

# ஏறக்குறைய ஜீனியஸ்

சிவில் ஏவியேஷனில் சேருவதற்கு முன்னால் நான் மூன்று மாதம் ரங்கநாத் கம்பெனியில் ஸேல்ஸ் எக்ஸிக்யூட்டிவ்வாக வேலை பார்த்ததைச் சொல்கிறேன். அதற்கு நீங்கள் 'புல்ஸுட் மாப்பிள்ளை' என்று பெயர் பெற்றுவிட்ட துரைசுவாமி என்பவரைத் தெரிந்து கொள்ள வேண்டும். பத்மனாப அய்யங்கார் வீட்டுக்கும் சக்கரத்தாழ்வார் வீட்டுக்கும் இடையில் அவசரமாகச் செருகினது போல் ஒரு வீடு இருக்குமே, அந்த வீட்டுப் பாப்பாவைக் கல்யாணம் செய்துகொண்டவர் துரைசுவாமி.

பாப்பாவை அம்மிணி என்று யாரும் நிஜப் பெயர் வைத்துக் கூப்பிட்டதாக ஞாபகம் இல்லை. அவளுக்கு ஒரு வழியாகக் கல்யாணம் ஆனதில் எங்களுக்கெல்லாம் சந்தோஷம். மேற்குறிப்பிட்ட வீடு

அவள் அம்மாவின் சொந்த வீடு. அப்பா கிடையாது. லால்குடியில் ஒரு மாமாதான். வாரா வாரம் பாப்பாவைப் பெண் பார்க்க ஒற்றை யாட்டு வண்டியில் மாப்பிள்ளைகளை அழைத்து வருவார். பாப்பாவும் வாரந்தவறாமல் பட்டுப்புடவை உடுத்திக்கொண்டு, நமஸ்காரம் பண்ணிவிட்டு, பாட்டுத் தெரியுமா என்று கேட்டால் பிடிலை எடுத்துக்கொண்டு 'வரவீணா' வாசித்துக் காண்பிப்பாள். வாரந் தவறாமல் பல்லவியிலேயே ஒரு இடம் 'கிறீச்'சென்று தடுக்கும். (பாப்பாவுக்கு 'எண்ணி எண்ணிப் பார்க்க மனம் இன்பம் கொண்டாடுதே' வாசிக்கத் தெரியும். அது இன்னும் மோசம்.) மாப்பிள்ளை வீட்டார் ஊருக்குப் போய்ப் பதில் போடுகிறேன் என்று சொல்லிப் பதிலே போட மாட்டார்கள். இதனால் ஆண்கள் சமுதாயமே மோசம் என்று பாப்பாவுக்கு வெறுப்பு வரவில்லை. அடுத்த வாரத்துக்கு அடுத்த நம்பிக்கைக்குத் தயாராவாள். இந்தத் தடவை பட்டணத்துக்குக் கூட்டிப்போய் வயலின் வாசிக்காமல் பெண் பார்த்ததாகத் தெரிந்தது. எப்படியோ கல்யாணம் நிச்சயமாகி விட்டது.

லால்குடியில் நடந்த அந்தக் கல்யாணத்துக்கு என்னால் போக முடியவில்லை. இண்டர்வ்யூ. பாப்பாவையும் கல்யாணம் பண்ணிக் கொண்ட மாப்பிள்ளை வரப்போகிறார் என்று கீழச் சித்திரை வீதியே பரபரப்பாக இருந்தது. மாப்பிள்ளை கார் எல்லாம் வைத்திருப்பதாகவும் பிக்கல் பிடுங்கல் இல்லாத குடும்பம், ஏகாந்திரத்துக்கு சொத்து, ஸ்ரீரங்கத்தில் ஒரு இண்டஸ்ட்ரி வைக்கப் போகிறார் என்றும் தெரிந்தது. அதில்தான் என் முதல் வேலை கிடைத்தது.

மாப்பிள்ளை வந்த தினத்தை என்னால் மறக்க முடியாது. தேர்முட்டியிலிருந்தே டகடக் டகடக் என்று சப்தமிட்டுக்கொண்டு ஒரு ஃபோர்டு கார் பின்பக்கம் வழித்தாற்போல் இருக்குமே, அது வந்து நின்றது. அதிலிருந்து மாப்பிள்ளை துரைஸ்வாமி ஆஜானுபாகு வாக இறங்கினார். பாப்பாவுக்குப் பொருத்தமில்லை என்று வத்ஸலா சொன்னது வாஸ்தவம்தான். கோட்டு – டை – பாண்ட் எல்லாம் போட்டிருந்தார். கார் கதவைச் சாத்தினதும் அதிர்ச்சியில் இந்தப் பக்கக் கதவு திறந்துகொண்டது. காரின் மூக்கைத் திறந்து கொஞ்சம் காற்றாடவிட்டு, பெரிய பெரிய பெட்டிகளை எல்லாம் இறக்கி வைத்து வீட்டுக்குள் போனார். வீதியே முகங்களாய்ப் பார்த்துக் கொண்டிருக்க, கொஞ்ச நேரத்தில் சரிகை வேட்டிக்கு மாற்றிக் கொண்டு பாப்பாவை முன் ஸீட்டில் உட்கார வைத்துக்கொண்டு கோவிலுக்குப் போனார்.

சில நாள் கழித்து டொம் டொம் என்று அவர்கள் வீட்டில் சப்தம் கேட்க, வெளியே வந்து பார்த்தால் போர்டு மாட்டிக் கொண்டிருந்தார்கள்.

ரங்கநாதா அண்ட் கோ.

மான்யுஃபாக்சரர்ஸ், கன்ஸல்டண்ட்ஸ். ஆர். துரைசுவாமி, எம். ஐ. ஐ. இ. (ப்ரொப்) என்று.

கன்ஸல்டண்ட்ஸ் ஸ்பெல்லிங் தப்பாக இருந்தது. அதைக் கீழே நின்றுகொண்டே மேற்பார்வை பார்த்துக்கொண்டிருந்த துரைசுவாமி பின் வாக்கிலேயே நடந்து எங்கள் வீட்டுக்கு எதிரே வந்தார். அறிமுகமில்லாமலேயே என்னிடம் "எப்படி இருக்கு?" என்றார்.

"இது என்ன ஸார்?"

"புதுசா கம்பெனி ஆரம்பிச்சிருக்கேன். உன் பேர் என்ன?"

"ரங்கராஜன் ஸார். இஞ்ஜினியரிங் படிச்சுட்டு வேலை தேடிண்டு இருக்கேன்."

இதற்குள் அம்மா வந்து, "காப்பி சாப்பிடறான், ரங்கன் கடைல போய் அரட்டை அடிக்கிறான், கிரிக்கெட் மாட்சுக்குப் போயிடறான், இல்லை மத்தியானத் தூக்கம், மறுபடி சாயங்காலம் கடைக்குப் போய் எட்டு எட்டரைக்குத்தான் வரான். நீங்க எங்காத்து மாப்பிள்ளை மாதிரி. பாப்பாவைக் குழந்தேலேருந்து எங்களுக்கெல்லாம் தெரியும். எம் பிள்ளைக்கு ஏதாவது வேலை பார்த்துக் கொடுங்களேன்."

"கொடுத்துட்டாப் போச்சு, ஒரு ஸேல்ஸ் எக்ஸிக்யூட்டிவ் வேலை காலியாத்தான் இருக்கு. என்ன சப்ஜெக்ட்?"

"எலக்ட்ரானிக்ஸ் ஸார்."

"அப்படியா, உடனே எலக்ட்ரானிக் ப்ராடக்ட் ஏதும் செய்யறதா இல்லை. எங்கிட்ட ஒரு புஷ்பல் சர்க்யூட்டும் ரெண்டு வால்வு சர்க்யூட்டும் இருக்கு. நானே டிஸைன் பண்ணது. அதை ப்ரொடக்ஷனைஸ் பண்ணலாம். எதுக்கும் கம்பெனில சேர்ந்துரு முதல்ல. பேட்டண்ட் மெடிஸின்ஸ் பண்ணப் போறேன். கம்பெனி நெளிவு சுளிவெல்லாம் முதல்ல தெரிஞ்சுக்க. சீனிவாச நகர்ல ஃபாக்டரி வெக்கப் போறேன். இப்ப மாடில லாப் மட்டும் வெச்சிருக்கேன். சாயங்காலம் ஆத்துப் பக்கம் வா. அப்பாய்ண்ட்மெண்ட் லெட்டர் கொடுக்கறேன்" என்று சொல்லிப் போனார்.

அம்மா "பாத்தியாடா, திருப்பதிப் பெருமாளுக்கு வேண்டிண்டது பலிச்சுடுத்து" என்றாள். எதிர்த்த வீட்டிலேயே வேலை கிடைத்ததில் எனக்கு சந்தோஷமாகவே இருந்தது. டெல்லிக்கு எதற்குப் போக வேண்டும்? சாயங்காலம் அவர் சொன்னதுபோல லெட்டர் ஹெட்டில் 'வித் ரெஃபரன்ஸ் டு யுர் இண்டர்வ்யூ வித் அஸ்' என்று எகிறி எகிறி டைப் அடித்த ஒரு காகிதத்தை பாப்பா கொண்டுவந்து கொடுத்தாள். பாப்பாதான் மேனேஜிங் பார்ட்னர் என்று ரங்கநாத் அண்ட் கம்பெனிக்காகக் கையெழுத்துப் போட்டிருந்தாள். இருநூற்றைம்பது ரூபாய் சம்பளம் என்று போட்டிருந்தது.

முதல் நாள் நான் எதிர்த்த வீட்டுக்கு வேலைக்குப் போன போது ஸார் லாபில் மாடியில் இருப்பதாகத் தெரிந்தது. மர ஏணி ஏறி அங்கே போனபோது அவர் பனியன் இல்லாமல் வேட்டியை

டப்பாக் கட்டு கட்டிக்கொண்டு ஒரு ஸ்டவ் மேல் பாத்திரத்தை வைத்து அல்வா மாதிரி ஏதோ கிளறிக்கொண்டிருந்தார். காட்டமாகக் கற்பூர மணம் வந்தது. "வந்தியா ட்யூட்டிக்கு? உடனே நீ என்ன பண்றே, வடக்கு வாசல் சின்னராஜு கடை இருக்கு பாரு. அங்க போய் மெழுகுவத்தி வாங்கிண்டு வந்துரு."

"சரி ஸார், எத்தனை ஒண்ணா, ரெண்டா?"

"கடைல இருக்கிற அத்தனை மெழுகுவத்தியும் வேணும். வடக்கு வாசல் பூரா விசாரிச்சு எந்தக் கடைல மெழுகுவத்தி இருந்தாலும் வாங்கிண்டு வந்துரு அப்படியே. என்ன?"

"காசு?"

"பில் போட்டுண்டு வா. வவுச்சர் பாஸ் பண்ண உடனே பேமெண்ட் ஆயிடும். கம்பெனில அக்கவுண்ட் முதல்ல நேரா இருக்கணும். சின்னராஜுகிட்ட நான் சொன்னதா சொல்லு" என்றார்.

சின்னராஜு அதைக் கேட்டதும், "தம்பி போன வாரம் வத்தி கொடுத்ததுக்கே பணம் வரலை. அவரு என்னதான் பண்றாரு, இத்தனை மெழுகுவத்தியை வெச்சுக்கிட்டு? கடைல இருக்கிறதே அம்பதுதான்" என்றான். எனக்கு அவை எதற்கு என்று சொல்லத் தெரியவில்லை. இருக்கிறதைக் கட்டாக வாங்கிக்கொண்டு போய்ச் சேர்ந்தபோது லாபில் தரையெல்லாம் சின்னச் சின்னடா தகர டப்பிகள் வரிசையாக அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. என்னை சட்டையைக் கழற்றச் சொன்னார். கொண்டு வந்த மெழுகுவத்தி களையெல்லாம் பாத்திரத்தில் போட்டு, அவை சூட்டில் உடனே உருக அவைகளின் திரிகளை உருவி உருவிப் போட்டுப் பச்சையாக ஏதோ அந்தக் கலக்கலில் சேர்க்க வாசனை தூக்கியடித்தது. என்னைக் கலக்கச் சொல்லிப் பாகுப் பதம் வந்ததும் கொஞ்சம் கொஞ்சமாக அதை அந்த டப்பிகளில் ஊற்றினார்.

"என்ன மருந்து ஸார் இது?"

"தலைவலித் தைலம். அம்ருதாஞ்சனம், குரு தைலம் எல்லாம் ஏக விலை விக்கறாங்க. இது டப்பி இருபது பைசா" என்று நூற்றுக் கணக்கான டப்பிகளை நிரப்பிக்கொண்டே பேசினார். "க்ளியரா நூத்தம்பது பர்ஸண்ட் ப்ராஃபிட் இருக்கு. தேச்சுப்பாரு. தலைவலி, ஜலதோஷம், வாய்வு, மூச்சுப் பிடிப்பு ஏன் மூலத்துக்குக்கூட தடவிக்கலாம். கொஞ்சம் மெந்தால் அப்புறம் குப்பைமேனி மாதிரித் தழை இருக்கும். ஏற்காட்டில ஒண்டிதான் கிடைக்கும். அதிலதான் சூட்சுமம் இருக்கு."

இப்போது அந்தப் பெட்டிகளைக் காகிதத்தில் ரப்பர் ஸ்டாம்ப் முத்திரை அடித்த (ரங்கா பெயின் பாம்) பைகளில் நிரப்பி ஒட்டச் சொன்னார். எனக்குத் தமாஷாகவே இருந்தது. எலெக்ட்ரானிக்ஸுக்கும் இதற்கும் என்ன சம்பந்தம் என்று சற்று உறுத்தினாலும் உற்சாகமாகவே ஒட்டினேன்.

“லோக்கல் சேல்ஸ் எல்லாம் நீ பார்த்துண்டுரு. நான் ஏரியா ஸேல்ஸ் பார்த்துக்கறேன். ரொம்பப் பரபரப்பா விற்பனை ஆயிண்டிருக்கு.”

இப்போது பைகளை, நூறு நூறாகப் பிரித்து அட்டைகளில் ஒட்டினோம். “ஒண்டியாளாச் சமாளிக்க முடியலை. அதுக்காகத்தான் உன்னை அப்பாயிண்ட் பண்ணிட்டேன். ஒரு அட்டை ட்வெண்டி ரூப்பீஸ்க்குப் போகும். பன்னிரெண்டு ரூபா வாங்கு, போறும். முதல்ல, டிமாண்டைக் கிரியேட் பண்றதுக்குக் கமிஷன் ஜாஸ்தி கொடுக்கணும். சாயங்காலம் நல்ல பாண்ட் சர்ட்டா உடுத்திக்கோ, டை இருக்கா? டை தரட்டுமா?”

“நானா?”

“ஆமாம். கீழ வாசல், தெற்கு வாசல் கடைல எல்லாம் போனவாரம் போட்டது பறந்து போச்சு. அய்யரே ஸ்டாக் எப்ப வரும்ன்னு அரிக்கிறாங்க. அங்கங்கப் போய் பில் புக் போட்டுடு. வேணுங்கற அட்டையைக் கொடுத்துட்டு பணத்தை வாங்கிண்டு வந்துர வேண்டியதுதான்.”

சாயங்காலம் நான் ஸேல்ஸ் ட்ரிப்பில் கிளம்பியபோது துரைசுவாமி அழுக்காக ஒரு தோல் பை கொடுத்தார். அதற்குப் பொருத்தமாக டை கட்டிக்கொண்டு நான் கீழவாசலை நோக்கிப் புறப்பட, தெருவில் கொல்லைப்பக்கம் போயிருந்தவர்கள் எல்லாம் பாதியில் நிறுத்திவிட்டு என்னை வேடிக்கைப் பார்க்க வாசலுக்கு வந்துவிட்டார்கள்.

டிபிஜி கடையில்தான் முதல் அட்டை விற்றேன்; அதாவது விற்க முயன்றேன்.

“எங்க புல்ஸாட் அய்யரு?”

“அவர் ஏரியா போயிருக்கார். எத்தனை அட்டை வேணும் டி.பி.ஜி.?”

“என்ன அதுக்குள்ள வந்துட்டிங்க? போன வாரம் கொடுத்ததே இன்னும் ஒண்ணுகூடப் போகலையே!”

“அட்டையா, டப்பியா?”

“டப்பிப்பா. இதபாரு ஒண்ணே ஒண்ணு கிளிச்சுட்டேன். எனக்கே தலைவலியா இருந்ததுன்னு தடவிக்கிட்டேன். பாரு!” என்று நெற்றியைக் காட்டினான். நெற்றியெல்லாம் பொறிப் பொறியாக இருந்தது. “ஒரே எரிச்சல். எதோ கந்தகம் சேர்க்கறார் போலிருக்கு. தெரியாத்தனமா ஒண்ணுக்குப் போறப்ப, தொட்டுட்டனா, பொறிப் பொறியாயிருச்சு. டாக்டராண்டை காட்டி இன்ஜக்ஷன் போட வேண்டியதாயிருச்சு!”

“நான் அவர்கிட்ட சொல்றேன். இப்ப எத்தனை அட்டை எடுத்துக்கறிங்க?”

“இதபாரு. இருக்கிற அட்டையத் திருப்பி எடுத்துண்டு பணத்தை

திருப்பிக் கொடுத்தா போதும். நான் சொல்றேன்னு கோவிச்சுக்காதே. பாப்பாரவருங்களுக்கு இந்த பிஸினஸ்ஸெல்லாம் வராது. நான் ஏதோ ஸ்லேட்டு பலப்பம் வித்துக்கிட்டு இருந்தவன். தெரியாத்தனமா இந்த அட்டையைப் போய் வாங்கிட்டு ...”

“அப்ப அட்டை வேண்டாமா? ஒண்ணாவது எடுத்துக்கயேன் டிபிஜி!”

டிபிஜியின் கண்கள் விரிந்து சிவப்பாயின. “அடப்போய்யா. பன்னிப் பன்னிச் சொல்லிக்கிட்டிருக்கேன். நீ சொன்னதையே திரும்பத் திரும்பச் சொல்லிக்கிட்டிருக்கியே!”

தெற்கு வாசலிலும் இதே மாதிரி வரவேற்புத்தான். அங்கேயும் ‘கஸ்டமர் கம்ப்ளெய்ண்ட்கள்’ இருந்தது. ஒரு கடையில் ‘தலைவலி போயிருச்சு. ஆனா அதனால் உண்டான எரிச்சல் போகவில்லை’ என்று சொன்னார்கள். ஏழு மணிக்குத் திரும்பியபோது என்னிடம் கொண்டு போனதைவிட அதிகமாகவே அட்டைகள் இருந்தன. சில கடைகளில் வலுக்கட்டாயமாகத் திருப்பிக் கொடுத்து ரசீது பெற்றுக்கொண்டார்கள்; “பணம் மெள்ள வரட்டும்; இதை எடுத்துட்டுப் போயிருங்க.” ராத்திரி சாப்பிட்ட பின் ப்ரொப்ரைட்டருடன் இதை விவாதித்தேன். “ஸார் இந்த மருந்து எப்படி அத்தனை விக்கறதுண்ணு சொல்றேள்? நான் போன இடத்தில் எல்லாம் கம்ப்ளெயிண்ட்.”

“இல்லையே, நான் ஏரியா போயிருந்தேன். ரெண்டு அட்டை வித்துட்டேனே!”

“அது என்னமோ ஸார். போன இடத்தில் எல்லாம் ‘எரியறது எரியறது’ங்கிறா. மான்யூஃபாக்சர்ல ஏதோ தப்பு இருக்கு.”

“அதுவந்து, போன பாட்சில குப்பைமேனி ஜாஸ்தியா ஆயிடுத்து. அதனால இருக்கும். கண்ட்ரோல் பண்ணிடலாம்.”

“எனக்கென்னவோ இது போகும்னு தோணலை” என்றேன் தலைவலியுடன்.

“கவலைப்படாத, நீ சின்னப் பையன். முதல் ஏமாற்றங்களைத் தாங்கிக்கணும்கிறதுக்குத்தான் உன்னை லோக்கல் ரூட்டு அனுப்பிச்சு, புது ரூட்டெல்லாம் நான் எடுத்துண்டேன். பாரு ஒரு ஸ்கீம் வெச்சிருக்கேன். மருந்தோட ‘போனஸ்ஸா’ பல்பொடி ஃப்ரீயா கொடுக்கறம்னு வெச்சுக்க. அப்ப மூவ் ஆகும் இல்லையா?”

“பல்பொடியா?”

“பாரேன். நஞ்சன்கூடு பல்பொடியெல்லாம் பிச்சை வாங்கும்படியா ஒரு ஃபார்முலா வெச்சிருக்கேன்... ரொம்ப சீப்பு. நாளைக்குச் சின்னப் பசங்க ரெண்டு பேரை வரச் சொல்லியிருக்கேன் ... நீ என்ன பண்றே ...”

சின்னராஜு என்னைப் பார்த்து, “என்னய்யா, மெழுகுவத்தியா? திருச்சினாப்பள்ளியிலயே ஸ்டாக் இல்லை.”

“இல்லை, சின்னராஜு. சாக்பீஸ் வேணும்” என்றேன்.

"எத்தனை, ஒண்ணா ரெண்டா?"

"ஐந்நூறு ஐந்நூறா ரெண்டு டப்பி."

"என்னது ரெண்டு டப்பியா! சீரங்கத்திலயே அத்தனை சாக்பீஸ் கிடையாதேப்பா."

"நீ இருக்கிறதைக் கொடு. இந்தப் பத்து ரூபா அக்கவுண்டில் வரவு வெச்சுக்கச் சொன்னார்."

"பாக்கி நிறைய இருக்குதே!"

சாக்பீஸை எடுத்துக்கொண்டு நான் எங்கள் கம்பெனி லாபுக்குப் போனபோது சவுக்கார் வீட்டுச் சிறுவன் கோவிந்ததாஸும் நாராயணய்யங்கார் பேரன் பிச்சையும் ஓரத்தில் பின்கையைக் கட்டிக்கொண்டு நின்றுகொண்டிருந்தார்கள். அவர்கள் எதற்கு என்று புரியவில்லை. 'கொண்டா, கொண்டா, லேட்டாயிடுத்து. இன்னிக்கு ட்ரிப் போறதுக்குள்ள எனக்குப் பல்பொடி தயாரிச்சாகணும்' என்று வீட்டுக்குள்ளிருந்து எடுத்து வந்திருந்த குழவியை வைத்துக்கொண்டு சாக்பீஸை வெண்ணையாக அரைக்கச் சொன்னார். அரைக்க அரைக்க அவர் சிவப்பாக ஏதோ சேர்மானங்கள் சல்லடையில் சலித்த பிறபாடு கலக்கி, ஒரு மாதிரி பல்பொடி என்று சொல்லிக் கொள்ளும்படியாகப் பண்ணினார். தயாரித்த உடனே தரத்தைப் பரிசோதிப்பதற்காக கோவிந்ததாஸையும் பிச்சையையும் அழைத்துப் பல் தேய்க்கச் சொன்னார்.

"கால்ஷியம், கிராம்புச் சத்து எல்லாம் கலந்து ஸ்பெஷல் ஃபார்முலா. தேச்சா பயோரியா வராது, பல்லு பளபளன்னு ஆயிடும்."

கோவிந்ததாஸுக்குச் சரியாகத் தேய்க்க வராததால் அவரே சிண்டைப் பிடித்துக்கொண்டு தேய்த்துவிட்டார்.

"இதெச் சின்னச் சின்னப் பாக்கெட்டில் போட்டு இலவசமாகக் கொடுத்தா பறக்காதோ?"

"மாமா எரியுது!"

"முதல்ல சுருசுருன்னு இருக்கும். அப்புறம் பார், உன் பல்லை."

பல்பொடியில் எதோ சாயச் சத்து இருக்க வேண்டும். கோவிந்ததாஸ் இயற்கையாகவே சிவப்பான பையன். பல் தேய்த்ததும் சாந்திக் கல்யாணப் பெண்போல உதடெல்லாம் செவேல் என்று ஆகிவிட்டது. என்னதான் கொப்பளித்து அலம்பினாலும் சாயம் போகாமல் அதனுடன் ஒருவிதமான எரிச்சல் சேர்ந்துகொள்ள கோவிந்ததாஸ் நாங்கள் கூப்பிடுவதையெல்லாம் அலட்சியப்படுத்திவிட்டு சவுக்காரிடம் ஓடிவிட்டான். அவர் பஞ்சக்கச்சத்துடன் 'பத்மாஷ்' என்று இரைச்சலாக வாசலில் வந்து சப்தம் போட்டார். இந்தியில் ஏதோ பிரபலமாகப் பேசினார். எங்களைத் திட்டுகிறார்போல இருந்தது. வீதியில் போகிற வருகிற பேருக்கெல்லாம் கோவிந்ததாஸின் வாயைக் காட்டிக்கொண்டிருந்தார். பிச்சை எரிச்சல் தாங்காமல்,

"விட்டிருங்கோ மாமா, எங்கப்பா பில்ட்டாலே வீறிப்பிடுவா" என்று கெஞ்ச துரைசுவாமி என்னை அனுப்பி வைத்தார். பத்மனாபய்யங்கார் மத்தியஸ்தத்துக்கு வர தேர்முட்டி டாக்டரிடம் கோவிந்ததாஸை அழைத்துச் சென்றேன். அதனுடன் இலவசப் பல்பொடி சமாசாரம் கைவிடப்பட்டது.

அதன்பின் ஒரு தினம் சமயபுரத்துக்குக் காரில் என்னை ஸேல்ஸ் ட்ரிப் அழைத்துச் சென்றார் துரைசுவாமி. போகும்போதே கார் சந்தேகக் கேஸாகத்தான் இருந்தது. குப்பென்று பெட்ரோல் வாசனை. கொள்ளிடம் பாலம் தாண்டியதும் ரெண்டுங்கெட்டானாகப் போக்குவரத்தை அடைத்துக்கொண்டு நின்றுபோயிற்று. ஸார் அதன் இன்ஜினுக்குள் குனிந்து உறிஞ்சி பெட்ரோலைக் கொப்பளித்துவிட்டு, "இப்ப ஸ்டார்ட் பண்ணு" என்றார். ம்ஹூம்! நான்தான் பஸ் பிடித்து திருவானைக்காவல் வந்து ஒரு மெக்கானிக்கை அழைத்து வர வேண்டியிருந்தது. அவன் அதனடியில் படுத்துக்கொள்ள, மரத்தடியில் இளநீருடன் நாங்கள் உட்கார்ந்திருக்கிறபோது துரைசுவாமி வாழ்க்கையில் தன்னுடைய பிலாஸஃபியைப் பற்றிச் சொன்னார்:

"என்னைப் புரிஞ்சுக்க இந்த நாட்டில அதிகம் பேர் இல்லை. நான் கண்டுபிடிச்ச சைக்ளோஜைரோவைப் பத்தி விசாரிச்சு ஜே. பால் ஜான்ஸன்னு ஒரு வெள்ளைக்காரன் கடுதாசி எழுதியிருக்கான். பார்த்தன்னா அசந்துபோயிடுவே." (என்னிடம் அதை மூன்று முறை காட்டியிருக்கிறார்.) 'உங்கள் கண்டுபிடிப்பை வியாபார ரீதியாகப் பயன்படுத்த என் மனச்சாட்சி இடம் கொடுக்கவில்லை.' இதபார் ரங்கா, என்னப் புரிஞ்சுக்கற காலம் வரும்போது என் ஐடியாவெல்லாம் ஜனங்கள் ஏத்துக்கறபோது நீ என் அஸிஸ்டெண்டா இருந்தேன்னு பெருமைப்பட்டுக்கலாம். என் பையாக்ரஃபியை எழுதலாம் நீ. தெரியுமா? மொத்தம் எங்கிட்ட தொண்ணூறு ஐடியா இருக்கு. சிலதெல்லாம் வெளில சொல்லவே பயமா இருக்கு. எங்கயாவது ஐடியாவைத் திருடிடுவானோன்னு. பேட்டண்டு ஆபீஸு மனுவே பதினஞ்சுதான் போட்டிருக்கேன்."

"ஸார், இந்தக் கார்ல ரொம்ப வேலை இருக்குது. பேசாம வித்துருங்க. வீட்டுக்குத் தள்ளிட்டுப் போறதைவிட சீப்பா இருக்கும்!"

"நல்ல ஃபோர்டு ப்ரிஃபெக்ட் மாடல்ப்பா, என்ன விலைக்குப் போகுங்கறே? சூப்பர் சார்ஜர் எல்லாம் போட்டிருக்கேன், ஏரோப்ளேன் மாதிரி."

"நூத்தம்பது ரூபாய் வந்ததுன்னா பேசாம வித்துருங்க."

காரைத் தள்ளிக்கொண்டே ஸ்ரீரங்கம் திரும்பும்போது, "யாரையும் ஏமாத்தாதே. உண்மைதான். அங்க இங்க கடன் வெச்சுப்பேன். பைசாவுக்கு இப்ப ரொம்ப முடைதான். ஆனா பைசா வந்தா என்னைப் பார்த்திருக்கியோல்லியோ? எல்லாருக்கும் சப்ஜாடா அக்கவுண்ட் செட்டில் பண்ணுவனா இல்லையா?"

"ஆமாம் ஸார்."

**அ**வர் ஏமாற்று வித்தைக்காரர் அல்ல. தன் கண்டுபிடிப்புகளின் சாத்தியங்களை உண்மையாகவே நம்பினார். சைக்கிள் சக்கரத்தில் ரேடியோ பாடும் என்று நம்பினார். காற்றில் கடிகாரம் ஓடும் என்றார். அவர் தொடாத துறையே இல்லை, பனியன் கிழிசல்களை அரை அரை என்று அரைத்து பால் பேப்பர் செய்து பார்த்தோம். சீனிவாசநகரில் தொழிற்சாலை ஏற்படுத்தக் காலிமனைக்கு அட்வான்ஸ் கொடுத்திருந்தார். என்னை வைத்து அங்கே ஒரு ரேடியோ ஃபாக்டரியும், மோட்டார் பம்ப் செட்டும், டெலிவிஷன் பயிற்சியும் அமைக்கத் திட்டம் போட்டிருந்தார்.

இதனிடையில் நான் இன்டர்வ்யூவுக்குப் போயிருந்த வேலை கிடைத்துவிட்டது.

"அப்படியா? என்ன சம்பளம் தரான்?"

"இருநூத்து எழுபத்தஞ்சு ஸார். முதல்ல அலகாபாத்ல ட்ரெய்னிங்."

"வேலையை வேண்டாம்னு எழுதிப் போட்டுரு."

"ஸார்! அது வந்து கவர்மெண்ட் உத்தியோகம்!"

"எதுக்கு வடக்கே போகணும்? நான் உனக்கு ஸ்ரீரங்கத்திலேயே நானூறு ரூபா போட்டுத் தரேன். இன்னிலேர்ந்து உனக்கு அஸிஸ்டண்ட் ஒர்க்ஸ் மானேஜரா ப்ரொமோஷன்!"

"என்ன ஸார்! செஞ்ச வேலைக்கு இன்னும் நீங்க சம்பளம் தரவே இல்லை" என்று சொல்லிவிட்டேன். அவர் காயம் பட்ட பார்வையுடன், "கம்பெனி ஆரம்பத்தில் இப்படித்தாம்பா இருக்கும். இதபாரு உனக்குக் கொடுக்க வேண்டிய சம்பளப் பாக்கிக்கெல்லாம் அக்கவுண்டு சரியா இருக்கா?"

நான் தலை ஆட்டினேன்.

"எல்லாத்தையும் உன்னை பார்ட்னரா ஆக்கறதுக்கு வரவு வெச்சிண்டிருக்கேன். நாளைக்கு பிரைவேட் லிமிட்டெட் கம்பெனி யானதும் ஷேரா மாத்தித் தந்துரப் போறேனே! அவ்வளவுதான். நீ என்ன பண்றே, போகாதே. எவ்வளவோ செய்ய வேண்டியது எனக்குப் பாக்கியிருக்கு. என் ஐடியாக்களை எல்லாம் புரிஞ்சிக்கிறவன் நீ ஒருத்தன்தான். நீ போய்ட்டன்னா எனக்குக் கையொடிஞ்சாப்பல ஆயிடும். சொந்தப் பெண்டாட்டி மாமியார்கூட மதிக்க மாட்டேங்கறா. உலகத்தில ஒரு ஜீனியஸா பொறக்கக்கூடாது. போகாதே. கார்த்தாலை யோசிச்சு எனக்குப் பதில் சொல்லு."

காலை நான் வேலையை விட்டு சர்க்கார் உத்தியோகத்தில் சேர்வதாகத் தீர்மானித்துவிட்டதைச் சொன்னதும் அவர் பார்வை என்னைத் 'துரோகி' என்றது. "சரி, உன் இஷ்டம். பின்னால் ரொம்ப வருத்தப்படப் போறே அவ்வளவுதான்."

நான் வேலைக்குச் சேர்ந்து ஊரூராகச் சுற்றி மறுபடி ஸ்ரீரங்கத்துக்குப் போவதற்கு மூன்று வருஷங்கள் ஆகிவிட்டன. எதிர்வீடு பூட்டியிருந்தது.

புழுதியாக இருந்தது. ரங்கநாத் அண்ட் கோ போர்டு டிசம்பர் மாதம் அடித்த புயலில் பாதியாக மடங்கித் திரும்பிக்கொண்டிருந்தது. அவர்கள் எல்லோருமே ஊரை விட்டுப் போய்விட்டதாகவும், மாப்பிள்ளை ரொம்ப நஷ்டப்பட்டு விட்டதாகவும் – பெரிசாக ஏதோ ஆரம்பித்தாராம் – வீட்டை விற்றுவிட்டதாகவும் அதைப் பால் டிப்போக்காரரர் வாங்கியிருப்பதாகவும் சொன்னார்கள்.

ரெண்டுநாள் கழித்து லால்குடி மாமா வந்திருந்தார். வீட்டை ஒப்புக் கொடுக்குமுன் உள்ளேயிருந்த கண்டாமுண்டா சாமான்களை எல்லாம் எடுத்து வெளியே போட்டுக் கொண்டிருந்தார். அருகே சென்றேன்.

"என்ன மாமா எல்லாத்தையும் என்ன பண்ணப் போறீங்க?"

"எடைக்குப் போடப் போறேன், ஏதாவது வேணுமானா எடுத்துக்கோ."

நான் கீழே போய்ப் பார்த்தேன். என்ன என்னவோ உதிரி சாமான்கள், மோட்டார் பொருத்தப்பட்ட நடைவண்டி, வெண்மையான மாவு போன்ற பவுடர் பாக்கெட்டுகள், ரேடியோ வால்வுகள், காரின் 'ஷாக் அப்சார்பர்', கட்டுக் கட்டாக ஃபைல்கள். 'அன்புள்ள துரைசுவாமி, அமெரிக்கத் தூதுவருக்கு நீங்கள் எழுதிய கடிதம் எனக்கு அனுப்பப்பட்டது. கடலின் நடுவில் மிதப்புகள் அமைத்து புயலின் வருகையை எதிர்பார்த்துச் சொல்வதற்கு நீங்கள் குறிப்பிட்டிருக்கும் யோசனை படிக்க சுவாரஸ்யமாக இருந்தாலும் அமெரிக்க அரசாங்கத்திற்கு தற்போது இதில் ஆர்வம் இல்லை என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்' – ஒரு உடைந்த டெலிபோன், ஸால்டர் அயர்ன், லென்ஸ், ஜெர்மன் மொழியில் புத்தகங்கள், சோழிகள், பல் சக்கரங்கள் . . .

"மாமா! மாப்பிள்ளை எங்க இருக்கார் இப்ப?"

"பட்டணத்தில் ஆஸ்பத்திரியில் அட்மிட் ஆயிருக்கார்."

என்ன உடம்பு என்று கேட்கப் பயமாக இருந்தது. கீழே கிடந்த பெட்டிபோல இருந்ததைத் தேர்ந்தெடுத்தேன். "எடுத்துக்கோ. உனக்கு வேணும்னா வெச்சுக்கோ."

அதை ஆராய்ந்தேன்.

ஏதோ ஸ்ப்ரிங் மெக்கானிஸம்போல இருந்தது. தேடி ஒரு சாவியை எடுத்து சாவி கொடுத்துப் பார்த்தேன், கையை விட்டதும் அந்தப் பெட்டியிலிருந்து இனிமையாக டிங்டிங்டிங் என்று 'எண்ணி எண்ணிப் பார்க்க மனம் இன்பம் கொண்டாடுதே' பாடியது.

"ஜீனியஸ் ஸார்!" என்றேன்.

"அல்மோஸ்ட் எ ஜீனியஸ்" என்றார் லால்குடி மாமா.

வியப்புடன் மறுபடி அதற்கு சாவி கொடுக்க, இந்த முறை 'விரக்' என்று சப்தம் வந்து அதனுள்ளிருந்து பற்பல பாகங்கள் தெறித்து விழுந்தன.

1983